உ

சிவமயம்

# இராய வேலூர் ஸ்ரீ தோபா சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்.






இராய வேலூர்
ஸ்ரீ தோபா சுவாமிகள் மடாலய வெளியீடு
29–3–1968.
விலை 30 காசு

உ

சிவமயம்.

## ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் வணக்கம்,

சிதம்பரம் ஸ்ரீ மௌன சுவாமிகள் மடம்
ஸ்ரீமத் சபாபதி சுவாமிகள் இயற்றியது



இமையவர் பரவும் திருநிறை வேலூர்
எழுந்தருள் ஐங்கரக் களிற்றை
எமையருள் குகனை அருளுரு அகிலாண்
டேச்வரி யாகும்எம் அன்னையை
இமிழ் சுடர் மவுலி புனைதருசலகண்
டேசுர னுமுய ரிறையை
நமைப்பிறப் பொழிக்கும் குருபரன் தோபா
நாண் மலரடிகளைத் தொழுவாம்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# இராய வேலூர்
# ஸ்ரீ தோபா சுவாமிகள்
# சரித்திரச் சுருக்கம்.

---

சிதம்பரம்
ஸ்ரீலஸ்ரீ மௌன சுவாமிகள் மடம்
ஏழாவது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சபாபதி சுவாமிகளால்**
பார்வையிடப்பெற்றது.

இராயவேலூர், சைதாப்பேட்டை
ஸ்ரீ தோபா சுவாமிகள் மடாலயத் தலைவர்
**தவத்திரு. சோம, வடிவேலு சுவாமிகளால்**
அச்சிட்டு
பிலவங்க ஆண்டு பங்குனித் திங்கள் 16-ம்நாள்
நடந்த
**குருபூசை விழாவின்போது**
வெளியிடப்பெற்றது.
29—3—1968.

# முன்னுரை.

உலகெங்கும் வியாபகமாய் விளங்கும் இறைவன் அவனது திருவருள் பெற்ற மெய்யடியார் பால் மிகச் சிறப்புற்று விளங்குகின்றான். எங்கும் வியாபித்து விளங்கும் சந்திர, சூரியர்களுடைய ஒளி எவ்வாறு சந்திர காந்தக்கல், சூரிய காந்தக் கற்களிடத்தே வெளிப்பட்டு விளங்கித் தோன்றுகின்றதோ அவ்வாறே இறைவனும் திருவருள் நலம் வாய்க்கப்பெற்ற மெய்ஞ்ஞானியர் பால் நிறைவு பெற்று சிறப்பாக விளங்குகின்றான் என்பதும், இதனால் தெய்வ வழிபாட்டினும் அவர் தம் மெய்யடியார் வழிபாடு மிகு சிறப்பும் பயனும் தர வல்லது என்பதும், ஆன்றோர் கண்ட முடிபாம்.

"இந்திரவி நீள்கிரணம் எங்கும் நிறைந்தாலும்
இந்திரவி காந்தத் திலகுமே - இந்திரவி
நேத்திரத்தோன் எங்கும் நிறைந்தாலும் நித்தன்
நேத்திரத்தோர் பாலே நிறைவு" [அருள்

என்னும் நீதிவெண்பாவால் இதனை நன்கு உணரலாம்.

அப்பூதி அடிகள் நாயனார் என்னும் பெரியார் இறை வழிபாட்டினும் அவர்தம் மெய்யடியார் வழிபாடே மிகுபயன் தரவல்லது என்பதனை மனத்துட் கொண்டு, திருநின்ற செம்மையாற் சிறப்புற்றிலங்கும் திருநாவுக்கரசு சுவாமிகள்பால் மெய்யன்பு செலுத்தி அவர் அருள் பெற்றமை யாலேயே வீடு பேறும் சித்திக்கப் பெற்றார் என்பதனை அறிகின்றோம்.

இவரைப்போலவே "வேத நெறி தழைத் தோங்க மிகு சைவத் துறை விளங்கப்-பூத பரம்பரை பொலியப் புனித வாய் மலர்ந்தழுத' பெருஞ்சிறப்பினர் சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார். இவர்பால் மெய்யன்பு பாவித்துத் திருவருள் விளக்கம் பெற்றவர் வடார்க்காடுஜில்லாவிலுள்ள வேலூர் என்னும் ஊரில் கோயில் கொண்டு விளங்கும் ஸ்ரீ தோபா சுவாமிகள் ஆவார்கள்.

இவர் சிவதசையுடன் விளங்கிய ஞான்றும் பின்னரும் இன்னவரருளால் நோய் நீக்கம், பொருட்பேறு, மகப்பேறு முதலிய இம்மை நலமும் மறுமை நலமும் பெற்று வாழ்ந்தவர்கள் பலராவர் என்பது இவர் தம் வரலாற்றினுல் அறியக் கிடக்கின்றது. இவர்தம் வரலாறு தெரிவதனுல் புதிதாகப் பலர் அன்பு செலுத்தி இவரருளேப்பெற வாய்ப்பாயிருத்தலின் இப்பெரியாரது வரலாறு திருவத்திபுரம் என்னும் ஊரில் வசித்திருந்த முத்தமிழ் ரத்திஞகரம் சைவ ஸ்ரீ ம. தி. பாநுகவி என்பவரால் 156 கவிகளில் பாடப்பெற்றுள்ளது.

இதன்பின் கவி வடிவில் உள்ள நூல் மிகக் கற்றவர்க்கேயன்றி மற்றவர்க்குப் பயன் தராமையின் உரைநடை வடிவமாக வேத மொழி பெயர்ப்பாசிரியராகிய காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சிவாஞந்த யதீந்திர சுவாமிகள் இயற்றி அச்சிட்டுள்ளார்கள்.

இந்நூல் மிகவிரிந்து பெரிதாயிருத்தலால் சுருக்கமாக எழுதி அச்சிட்டுத்தர வேண்டும்

என அன்பர் பலரும் விரும்பினார்கள். இதனை அறிந்து தற்போது வேலூர் ஸ்ரீ தோபா சுவாமிகள் மடத்தின் தலைவராக இருந்துவரும் தவத்திரு. சோம. வடிவேலு சுவாமிகள் மிக எளிய நடையில் சுருக்கமாக எழுதுவித்து 29—3—1968ல் நடைபெறுகின்ற குருபூசையில் அச்சிட்டு வழங்குகிறார்கள்.

இந்நூற்கண் வழக்காற்றில் இருந்துவரும் வரலாறுகளை இயன்றவரை தொகுத்து சேர்க்கப் பெற்றிருக்கிறது. மேலும் புதிதாக விடுபட்டுள்ள வரலாறுகளை தெரிந்தவர்கள் அவைகளைத் தெரிவிப்பாராயின் மறுபதிப்புக்களில் சேர்த்து வெளியிட உதவியாயிருக்கும்.

இந்நூல் வெளிவருவதற்குப் பல வகையிலும் நன் முயற்சி செய்து பல வகையில் அரும் பணி மேற்கொண்ட அன்பர்கட்கும், பொருள் உதவி செய்த நல்லோர்கட்கும் ஸ்ரீ தோபா சுவாமிகளின் இன்னருளால் எல்லாநலன்களும் எய்துவதாக.

தமிழ் கூறும் நல்லுலகம் இந்நூலினைப் பெற்று ஸ்ரீ தோபா சுவாமிகளின் வரலாறுணர்ந்து அப்பெரியார் அருளைப் பெறுவதாக.

26—2—68. **மௌன-சபாபதி சுவாமி.**

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு

## விநாயகர் துதி

திருவளர் மார்பின் வனமல ரலங்கல்
சேர்த்திய வரிமுத லமரர்
பெருவளங் களையூண் பொருளெனப் பேணுப்
பெருமித வுளத்திடைப் பிறங்கும்
ஒருவனை யுகத்துக் கொருதிருப் பெயரா
ரும்பலை யம்பிகை யளித்த
கருமுகி னிறத்த கசானனப் பரனைக்
கைதொழூஉ வணங்கிவாழ்த் திடுவாம்.

# ஸ்ரீ தோபா சுவாமிகள் துதி.



வண்டமிழ் மறைக டந்த
வள்ள லெங்காழி வேந்தை

கண்டருள் பெற்று வையங்
கைதொழக் கருத்தி லையன்

எண்டகைச் சித்து மேவல்
இயற்ற நல்வேலை யுற்ற

அண்டர்கள் புகழுந் தோபா
அடியிணை முடிமேல் வைப்பாம்.

# பிழைதிருத்தம்.



| பக் | வரி | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 4 | 11 | ரேர்க்குர | ரேர்க்கும் |
| ,, | 18 | ஸ்ரீராமநாதன் | இராமநாதன் |
| 5 | 8 | ஒன்கூறும் | ஒருகூறும் |
| 9 | 6 | வெளிபோர் | வெளிப்போங் |
| 10 | 18 | சென்றன் | சென்றனன் |
| 11 | 18 | தொண்டு | தொண்டுபூண்டு |
| 11 | 19 | அருளுக் | அருளுருக் |
| 12 | 14 | பெறவரும் | பெறலரும் |
| 12 | 19 | உள்ளத் | உள்ளத்தெளிவு |
| 13 | 19 | கருந்துறவி | கடுந்துறவி |
| 16 | 6 | அம்மதியன் | அம்முகம்மதியன் |
| 19 | 17 | மகம்மதியத் | முகம்மதியத் |
| 26 | 20 | றுய்வானுயின் | றுய்வானுயினன் |
| 40 | 16 | ஊண் | ஊன் |
| 41 | 5 | ஊண் | ஊன் |

ஓம்
சிவமயம்.




# ஸ்ரீ தோப்பாசுவாமிகள்

# இராயவேலூர்
# ஸ்ரீ தோப்பா சுவாமிகள் வரலாற்றுச் சுருக்கம்

## தோற்றுவாய்

செந்தமிழ் நாட்டின் தவப் பயனாய்த் தோன்றிய மெய்ஞ்ஞானச் செல்வர்கள் பலர் தமிழ்நாட்டின் பல பாகங்களிலும் வாழ்ந்து அன்பர்கட்கு நல்லருள் செய்து மறைந்துள்ளார்கள்.

அவர்கள் வாழ்ந்த காலத்துத் தன்னை யடைந்த அன்பர்கட்குத் தாம் அரிதிற்பெற்ற திருவருட்செல்வத்தை வாரி வழங்கியதோடு மக்கள் நலங்கருதி அவர்கட்குற்ற வறுமை, நோய், பகைவரால் வரும் இன்னல் முதலிய இடுக்கண்களையும் தவிர்த்துப் புத்திரப்பேறு, செல்வம், நீண்ட ஆயுள் முதலிய நலங்களையும் பெறுவதற்கு இன்னருள் புரிந்துள்ளார்கள்.

அவர்கள் சமாதிநிலை யுற்றபின்னரும் சமாதி நிலையங்களில் வணங்கிவருவார்க்கு அத்தகு நலன்கள் சித்திக்கப்பெற்றுவரும் அரியவாய்ப்பு பலவிடங்களில் நிகழ்கின்றன. இப்பெரியார்கள் பலரது வரலாறுகள் மறைந்து வழக்கில் இல்லையாய்ப் போயின. பல வரலாறுகள் சிதைவு பெற்றும், மாறுபட்டும் வழங்கப்படுகின்றன. ஆதலின் அவ்வப்போது அன்னார் வரலாறுகளைத் தெரிந்தவரை சேகரித்து வெளிவரச்செய்வது இன்றியமையாததாம். இராயவேலூரில் வாழ்ந்த பெரியார் ஸ்ரீ தோப்பா சுவாமிகள் வரலாறு மறையாது சரித்திரமாகத் தெரிந்தவரை எழுதி அச்சிடப் பெற்றிருப்பினும் அவை பாடலாகவும், உரைநடையில் உள்ளது விரிவாகவும் இருப்பதால் சுருக்கமாக அறிந்து கொள்ளவேண்டி இந்நூல் எழுதப்பெறுகிறது.

## நூல்

## தலச்சிறப்பும், பெற்ரோர் தவமும்.

பொன்னி நதியின் பெருவளத்தாற் பொலிவுற்று விளங்குவது சோழநாடு. சோழவள

நாட்டில் சிறந்து விளங்கும் திருத்தலங்களுள் பலவகை மேன்மையும் பெற்றுத் திகழ்வது திரிசிரபுரம் என்னும் திரிசிராப்பள்ளியாகும்.

இத்திருத்தலத்தில் வாழ்ந்துவரும் பற்பல மரபுகளுள் ஒன்றான சைவ வேளாளர் குடியில் நல்லொழுக்கம் நிறைந்தவரும் சிவபத்தி, அடியவர் பத்தியிற் சிறந்தவரும் ஆகிய சிவகுருநாதப் பிள்ளை என்பவர் ஒருவர் இருந்தார். இவர் ஆங்கிலேய மன்னரின் சேனைகளாக இருந்த நமது தமிழ் மக்களுடன் காலாட்படையினராக விருந்து படைக்கலம் பயின்று அதனால் வரும் ஊதியங்கொண்டு தனது நன்மனைவியுடன் இல்லறம் நடாத்தி வாழ்ந்து வந்தார். அப்போது அவர்கள்பால் சில ஆண்மக்களும் ஒரு பெண் மகவும் பிறந்தனர்.

பின்னர் மனைவியும் தானுமாகப் பல தலயாத்திரை செய்து முடிவில் இராமேச்சுரம சென்று தீர்த்தமாடி இராமபிரானால் தாபித்துப் பூசிக்கப்பெற்ற இராமலிங்கப் பெருமானை

வழிபாடு செய்து அப்பெருமானைப் பலவாறு துதிசெய்து ஞானநெறி தழைத்தோங்க நன்மக வளிப்பாய் என்று மனமுருகிப் பரவிப் பின் வீடு சேர்ந்தனர்.

இவ்வழிபாட்டின் பயனாக இராமலிங்கப் பெருமான் திருவருளால் அம்மையார் கருவுற்றிருந்து உரிய காலத்தில் ஆண்மக வொன்று பெற்றுமகிழ்ந்தனர். இந்த ஞானக் குழந்தை தோன்றிய போது பற்பல நல் நிமித்தங்கள் தோன்றிய காரணத்தால் பெற் றோர்க்குஎ, மற்றோர்க்கும் முன்னிலும் பன் மடங்கு உளமகிழ்ச்சி உண்டாகியது.

**பிள்ளைச் சடங்கும், கல்வி பயிலலும்.**

இராமலிங்கப்பெருமானருளால் அவதரித்த அருமகவினைப் பாராட்டி தொட்டிலிலிட்டாட் டல், காதணி சூட்டல், இன்னமுதூட்டல் முதலிய சடங்குகளை உரியகாலத்தே செய்து இராமநாதன் அருளால் தோன்றிய காரணத்

தால் இராமலிங்கம் எனப் பெயர் சூட்டினர். இக்குழந்தை அறமுடையாரின் செல்வம் போன்றும்,' பொறையுடையாரின் ஞானம் போன்றும் வளர்ந்து வந்து கல்விகற்கும் பருவம் வந்தவுடன் தக்க ஆசிரியர் வாயிலாகக் கற்பிக்கும்போதே கல்வி கற்று மறந்தான் ஒருவன் மீண்டும் நினைவிற் கொள்ளுவதுபோல ஆசிரியரால் ஒன்கூறும் தாமே யுணர்ந்தது இருகூறும் திருவருளால் கிட்டியது ஒருகூறுமாகத் தமிழ்க் கல்வி நிரம்புவதாயிற்று.

கல்விபயின்றுவரும் காலத்திலேயே பெற்று வளர்த்த பெரும் புண்ணிய சீலர்களான தாய் தந்தையர்"...........பழிபிறங்காப் பண்புடைய"..... மகவாகிய இப்பெரியாரைப் பெற்றெடுத்த புண்ணிய நலத்தால் சிவப்பேறு பெற்றனர்.

**இளமையில் மன்னர் பாதுகாப்பு**

இதுகண்ட அரசினர் இவரை சேனைக் களத்திற் சேர்ப்பித்துப் படைக்கலப் பயிற்சி

யையும் பயில்வித்தனர். இவரும் ஆயுதப்பயிற்சி, பாய்மாவேற்றம் முதலிய போர்த் தொழில்களில் மிக மிகவல்லுநரானுர். உரியபருவமும் படைப் பயிற்சியும் வந்தவுடன் தந்தையார் செய்துவந்த அலுவலையும், அவருக்குரிய பட்டத்தையும் அளித்துப் போர்வீரர்களுடன் இவரையும் ஒருவ ராயச் சேர்த்துக் கொண்டனர்.

**கலைபயில், தெளிவு**

மிக்க இளமைக்காலத்தே- ஆசிரியர்பால் கற்றும் முன்னை நல்வினையால் தாமே தெரிந்தும் நிரம்புதலுற்ற தமிழ்க்கல்வியை மேலும் விடாது தாமாகவே ஓய்வு நேரங்களில் பயின்றுவந்தார். பெரியார்களது அரியதோத்திர நூல்களையும், விராகந்தோன்றும் அருள் நூல்களையும் பயின்று வந்தமையால் இறைவன்பால் பேரன்பும், உலகத்தின்கண் உவர்ப்பும் தோன்றிவந்தது. இதனேடு நல்லறிவு நல்கும் ஞான நூல்களையும் பயிலவே மெய்ப்பொருளுணர்வும் தோன்றியது. இதனுல் உள்ளத்தில் தெளிவு பிறந்தது. பிறவி

யினுல் வரும் துன்பம் பெரிதென அஞ்சி அதனை ஒழிக்கும் உபாயம் நாடியிருந்தார்.

**திருமுறைகளின் சிறப்புணர்ந்து ஓதுதல்**

பிறவி நீக்கத்திற்கு மற்றையவற்றினும் பெரியார்கள் அருளிச்செய்த பனுவல்கள் முதன்மையானதாகும் என்பதனை "ஒழித்திடும் பவப்பகை விரைந்துள்ளமே ஓதுமூதுணர்வோர் முற்பழிச்சுபாடலை அரற்கு அவை விடர்க்கு இளம்பாவை யருரைபோலும்........" என்று வைராக்கிய சதக முதலிய நூல்கள் உணர்த்து வதுகொண்டு உளம் தெளிந்து திருமுறைப் பாராயணமும் மேற்கொண்டு வரலானுர்.

**திருஞானசம்பந்தரின் திருவருள் பெறுதல்**

நாடோறும் திருமுறைகள் பாராயணம் செய்துவந்தமையாலும் முன்னை நல்வினையாலும் இவருள்ளத்தில் மறை பொருள்கள் சில தெளிவு பெறலாயின.

திருவருள் கைவரப் பெற்றிருந்தும் மற்றைய ஆசிரியன்மார்கள் அவத்தைகளின் வயப்பட்டு மயங்குவதுபோல் மயங்குதலின்றி சம்பந்தப்பெருமானுர்''...........தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரியபொருளாகும், தாவில்தனிச் சிவஞான சம்பந்தர் ஆயினுர்,, என்பதனுற் றனிச்சிறப்புடையவர் திருஞானசம்பந்தரே எனத் தெளிந்து அவரையே தம்மில் வேறறச் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

இவ்வாறு சிந்தித்திக்கொண்டிருக்கும் இவருடைய ஞான நிட்டையில் ஞானசம்பந்தப் பெருமானுர் இளம்பருவத்திருமேனி தாங்கி கண்கவர்வனப்புடன்ஒளி உருவராய்த்தோன்றி, அருளுபதேசம் செய்து, மெய்யுணர்வைத்திட முறுத்திமறைந்தருளினுர். இவ்வாறு சிவஞான உபதேசம் பெறலும், ஐயமறத்தமது திருவுள்ளத்தில் அமைத்துக்கொண்டுசிவஞான நிட்டையிலழுந்தியவராய் சீவகரணங்கள் அனைத்தும் சிவகரணங்களாகத் தனக்கொரு செயலுமின்றி

சிவத்தோடு அத்துவிதமாய் ஞானயோக இன் பந்திலேத் திருந்தனர்.

**சுவாமிகள் திருநாமம்.**

இவ்வாறு ஞானயோகத்திலிருந்து நனவிற் சுழுத்தி நிலையை யெய்தியிருக்கும் இவர் நிட்டை விடுத்த காலத்து கருவிகரணங்கள் வெளிபோர் திடும் போதே தோ—பா தோ—பா என்று சொல்லி மீண்டும் பலகாலும் அதனையே கூறி வருவார் இது தோடுடைய செவியன் என்னும் அருட்பாடலை அருளிச் செய்த திருஞானசம்பந் தப்பெருமானுகிய தம் அருட்குருவைச் சிந்திப்ப தாகும். இதனுல் உலகமக்கள் சுவாமிகட்கு தோபா சுவாமிகள் என்னும் திருநாமம் வழங்கி வரலாயினர்.

**ஆங்கிலப் படைத்தலைவன் வியப்பெய்துதல்**

இங்கிலைமை வந்து சிவஞான நிஷ்டை கைகூடி யிருந்தும் குறித்த காலத்தில் தம்புறத்

தொழிலாகிய சேனைக்களம் சென்று படைக் கலத்தொழிலையும் விடாது செய்து வருவார்.

ஒருநாள் இம்காநுபாவர் சிவஞான நிஷ்டை யிலிருந்து மனம் புறம்போந்திடாதிருக்கவே, பெருங்கருணை வள்ளலாகிய பரசிவப்பெருமான், இவர் படைக்கலத் தொழில்புரிய சேனைக்களம் செல்லாமையையுணர்ந்து இப்பெரியார்போல் ஒரு அருட்டிரு மேனிதாங்கிக்கொண்டு குதிரை மீதிவர்ந்து வழக்கமாக அவர்செய்துவந்த போர்த்தொழில்களைச் செய்தார். குறிப்பிட்ட நேரம் வரை செய்து முடிவுறும் நேரத்தில் பரி மாவைவிட்டுவிட்டு, தான் மாத்திரம் மறைந் தருளினூர். இதனைக் கண்டு அங்கிருந்த அனை வரும் பெருவியப்படைந்தார்கள். தலைவனுன ஆங்கிலத்துரை மகனும் புதியதொரு செயலா யிருந்தது கொண்டு செப்பரும் வியப்புற்றனன். உண்மை தெளிய எண்ணிஇம்மகாநுபவர் இருக் கும் இடம் சென்றன். அவர் அங்கே தனியிடத் தில் சித்திரத்திலெழுதிய விளக்குப்போல

சிந்தையும் திருமேனியும் அசைவற்றிருக்கக் கண்டனன். உயிர் துறந்திருப்பரோ என்னும் ஐயம்உளதாயிற்று. அருகிலிருந்த அன்பர் ஒருவரைவிளித்து ஐய, நீ சென்று யான் விளிப்பதாகக் கூறுதி என்றனன். அவ்வன்பரும் அதற்கிசைந்து அவ்வாறு உரக்கக் கூறியும் செவியிலேருது அசைவற்றிருத்தலும் உண்மையுணரும் வேட்கையனுய் கண் விழிக்கும் அளவும் காத்துக்கொண்டிருந்தனன்.

துரைமகன் அவ்விடத்திற்குப் புதிதாய் வர அதனைப் பெரியதொரு புதுமையாய் எண்ணி மக்கள் அங்கு கூடி விடவே, பெருங்கூச்சல் முதலியவற்ருல் நிட்டையிலிருந்த பெரியார் மனங்கலங்கெழுந்து சவிகற்பமனமுடையராய் விடயமுணர்ந்தனர். துரைமகனும் உண்மை நிலையை இனிதுணர்ந்தவனுய்த் திருவருட் பேறு பெற்றவர் என்று தம் முள்ளத்திற்கொண்டு பூண்டு கடவுளிடத்துப் உண்மைத்தொண்டு பேரன்புவைத் தமையாலேயே கடவுள் அருளுக்

கொண்டு வந்து படைக்கலத் தொழிலும் பயிலுவாரானுர்என்பதனையறிந்து பெரியாரைப் போற்றித்தமதிடஞ் சேர்ந்தான்.

**துறவெய்துதல்**

சிவஞான நிட்டையிலிருந்து வெளிமுகப் பட்டவுடன் இப்பெரியாருக்கு அங்கு நிகழ்ந்த செயல்கள் தெரியவந்தன. உலகியலைப் பெரிதும் மதித்து ஏனையோர் போல் சேனையிலிருந்து தொழில் புரிதல் முதலிய அனைத்தும் பயனற்ற செயல் என்பதனையுணர்ந்தார். தமதுள்ளத்து இயல்பாகவே துறவு நிலையின் மேன்மை தோன்றியது. விராகவுணர்வும் உண்டாகியது. இறைவன் தமக்களித்த பெறு வரும் திருவருட் பேற்றை எண்ணி எண்ணி விம்மிதம் எய்தினர். அரசாங்கப் பணியையும் விடுத்தார். "....சிற்றம்பலம்மேய, செல்வன் கழல் ஏத்தும் செல்வமே செல்வ" மெனக் கொண்டு மற்றைய பற்றுக்களனைத்தையும் விடுத்தார். ஏனையர்க்குண்டாகாத உள்ளத்

இவர்க்குத் திருவருளால் உண்டாயினமையால் துறவின் வேடமாகிய கல்லாடை அணிதல் முதலியவைகள் எவற்றையுங்கைக்கொள்ளாது ஆடை சிறிதும் அணியாது திகம்பரராய் மண் சட்டி ஒன்றில் ஐயம் ஏற்றுண்டு, “பற்றற்றான் பற்றினையே பற்று”க் கொண்டு துறவரசராய்த் திரிந்து கொண்டிருந்தனர்.

இவ்வாறு துறவின் வேந்தராய்த் திரிந்து கொண்டிருந்த இப்பெரியார் தத்தாத்திரேய ரைப் போன்று நான்கு நாய்களை மட்டும் தம் முடன் திரியுமாறு அன்பு பாராட்டி வளர்த்து வந்தனர். வேதம் நான்கினையுமே நாய்களாகக் கொண்டு வேட்டுவ வுருவில் விளங்கிய பெரு மானை நினைவுபடுத்துகின்ற நிலையில் இருந்தது இச்செயல் எனின் மிகையாகாது. முன்னொரு ஞான்று ஒருநாய் வைத்திருந்தவரையே பெரும் பற்றுடைய இல்லறத்தார் என்று குறைகூறப் பட்டிருக்க நான்கு நாய்களை உடன்கொண்டிருந் தும் கருந்துறவியென உலகம் போற்ற விளங்கி

ஞர் எனின் இவர் தம் மேன்மை வியக்கற்பால தாம்.

**அற்புதச் செயல்கள்**

**முகம்மதியன் வெகுளல்.**

சிவஞானச் செல்வராய், திருவருளிற் றேய்ந்த சிந்தையராய் உலகினை மறந்த நிலையில் உலவிவரும் இப்பெரியார் ஒருநாள் பகலில் மகம் மதியர்கள் இருக்கும் வீதியிற் சென்று கொண்டிருந்தனர். அங்கு மிக்க செல்வமுள்ள ஒரு மகம்மதியன் மனைவி, கோவணமுமின்றிப் பாலன் போலச் செல்லும் சுவாமிகளைக் கண்டு, நாணமுற்றுத் தன்கணவன் பால் "இவ்வெறியனை வெளியில் ஓட்டுவீராக" என்று கூறினள். அருளமுதுண்டு ஞானவெறி கொண்டுலவும் பெரியார் இவரென்பதனை அறியாதவனாகையால் அவன், தனது மனைவியின் சொல்லைக் கேட்டுச் சுவாமிகள் மீது சீறி விழுந்து வைது, தன் ஏவலாளனை விளித்து இவ்வெறியனை வெளியில்

துரத்துவாயாக என்று உத்தரவிட்டான். ஏவலாளனும் சுவாமிகளைக் கண்டு நகைத்துச் சாக்குப்பை தைக்கும் ஊசியை ஆண்குறியிற் படுமாறு எறிந்தான். அவ்வூசி இப்பெரியாரைத் தாக்காமல் ஏவிவிட்டவனைத் திரும்பிச் சென்று தாக்கியது. தாக்கலுற்றஊசியைப் பிடுங்கிவிட முயன்ருன். அதனுல்மேலும் பொறுக்கலாற்ருத வலியைத் 'தந்தது. ஆற்ற வொண்ணுத்துன்பம் வரவர அதிசபடுத்லும் சுவாமிகளின் பெருமையை உணரலானுன். சுவாமிகள் பால் வந்து வணங்கித் தன் தவறினைப் பொறுத்துக் காத்தருளவேண்டும் என்று பலவாறு வேண்டினுன்.

இவ்வண்ணம். அம்மகமதியன் வேண்டுதலும், சுவாமிகள் மனமிரங்கித் திருவருள் நோக்கஞ்செய்த மாத்திரத்தில் தானே ஊசி வெளியிற்கழன்றதோடு வலியும் இல்லாதகன்றது. அம்மகமதியன் எய்த ஊசி இப்பெரியார் திருமேனியிற்பட்டிருந்தாலும் சிறி

தும் நோவுண்டாக்காதென்பது திண்ணம். சுவாமிகள் திருவிளையாட்டாகவும், மக்கள் யாரும் இவ்வாறு பெரியாரைப் பிழைத்துப் பெரும் பாவந்தேடி அருங்கோர நரகில் விழாமலிருக்கவுமே இவ்வாறு செய்ததாம்.

பெரியாரின் பெருமையுணர்ந்த அம்மதியன் சுவாமிகளையே குலதெய்வமெனக் கொண்டு வழிபட்டு உய்ந்ததோடு, **தோபா மசூதி** யென்று சுவாமிகள் பேரால் ஒரு பள்ளியும் அமைத்து தம்கடவுளொடு சமமாகப் பாவித்துவந்தான் என்றால் இப்பெரியார்பால் அவன் கொண்டிருந்த நன்மதிப்பை என்னென்றுரைக்கலாகும். சென்னையில் தோபா மசூதி என்னும் பெயராலேயே இன்றும் வழங்கப்பட்டு காட்சியளிப்பதே போதிய சான்றாகும்.

சென்னையில் மயிலாப்பூரில் கபாலீசுரர் ஆலயத்தருகில் தோபா சுவாமிகள் மடம் என்று

ஒரு மடம் சிறப்புற விளங்குவதும் கவனிக்கற் பாலது.

**அதிகாரியின் கைதம்பித்தல்.**

ஒருநாள் வீதியிற்படுத்திருக்கையில் இப் பெரியாரைக் கண்ட ஊர்க்காவலன் (போலீசுக் காரன்) மிகவும் சினந்துபாட்டையிற் கிடக்கும் ஒட்டைச்சட்டியை யுடையவனே! நீட்டிப்படுக்க இடமில்லாது ஏன் மக்கள் கூட்டங் கூட்டமாய்ச் செல்லுகின்ற வழியிற் பிணம்போற் கிடக்கின் ருய்? என்று பலவாறு நிந்தித்து பலமுறை அதட்டியும் எழாதிருத்தலும் அவ்வதிகாரி முன் னிலும் அதிகமாகச் சினமுற்று கைப்பிரம்பால் அடிக்கக் கையை ஓங்கினன். ஓங்கியஅக்கை ஓங்கிய வண்ணம் தம்பித்து நின்றுவிட்டது. ஆனல் அவனடித்த அடி அவன் மனைவியின் மீது பட்டது. சுவாமிகளின் பெருமையுணரா மற் செய்த தவறு நினைந்துவருந்தினன். சுவாமிகள் திருவடியில் வீழ்ந்து வணங்கிப் பிழை பொறுக்க வேண்டினன். சுவாமிகள் திருவுள

மிரங்கி அருள் நோக்கஞ் செய்தனர். அவன் கையானது முன்போலவே இயக்கம் பெற்று நலம் பெற்றது.

இவ்வரலாற்றை அவ்வதிகாரியானவர் சுவாமிகள்பால் வணங்கிக் கேட்டும், அப்படித் தான் அப்படித்தான் என்று பதில் திருவாய் மலர்ந்தருளவே கைதம்பித்த வண்ணமே நின்ற தன்றி அம்மரபினரால் பின்வந்த மூன்று சந்தியார்கட்கும் கூட அப்படி இருந்துவந்ததாகவும் கூறுவதுண்டு.

**கள்ளமஸ்தானைச் சரித்தது.**

சுவாமிகள் ஞானசித்தராய்த் திரிந்து கொண்டிருக்குங்கால் ஒருநாள் மஸ்தான் என்ற பெயரால் அழைக்கப்படும் முகம்மதியத் துறவி ஒரு குழி எடுப்பிக்கச் செய்து அக்குழியில் இறங்கி இருந்துகொண்டு சமாதியிலிருப்பவர் போல் நடித்துப் பின் வெளிவருவார். மக்கள் அவரை அதனால் பெரிதும் போற்றுவர். சின்

ளுள் கழித்து மீண்டும் இவ்வாறே செய்வார். இதனுல் அவருக்குப் பெருமையும், மக்களுக்கு அவர்பால் பெரியதொரு நன்மதிப்பும் பெருகிவர லாயிற்று. நம் தோபா சுவாமிகள் அவ்விடம் வந்தபோது இவர்தம் வஞ்சகச் செயலையுணர்ந்த மையால். அம்மகம்மதியத்துறவி செய்யும் கபட யோகச் செயலை விளக்கிக்கூறியதன்றி நாட்டில் இவ்வாறு தீமைசெய்பவர்களால் மக்களுககு பெரிதும் அல்லலே யுண்டாகும். ஆதலால் அவரை விட்டுவைக்க மனம் இல்லாதவராய் மக்களே! அவர் செய்வது கபட நாடகம், மெய்ச்சமாதியன்று என்று சொல்லி அவர் இறந்துவிட்டார். அவரைப் பார்க்கக்காத்திருக்க வேண்டாம் என்று சொல்லிவிட்டு அவ்விடம் விட்டகன்றனர். சென்றவர் போக நின்றவர் சிலர் உண்மையுணர எண்ணி குகையைத் திறந்து பார்கக மகம்மதியத் துறவி மாண்டு கிடக்கக் கண்டனர். அதுகண்ட எல்லோரும் சுவாமிகளிடத்து முன்னிலும் பன்மடங்கு பேரன்புடையவரானுர்கள்.

**வேளைச்சேரியில் வித்தகர்க் கருளல்**

சுவாமிகள் வேளைச்சேரி யென்னும் ஊருக் குச் சென்ற போது சிதம்பரசுவாமிகள் என்னும் பெயருடைய பெரியார் அவ்வூரில் மடமொன்றி யற்றி அதில் ஒரு குகையும் செய்வித்து அதற் குள் இருந்து வரலானார். அவரைக் கண்ட சுவாமிகள் மண்ணில் வளை கல்லிகொண்டு வசிப்பது எலியேயாம். அறிவுடை நீயும் எலி போல் வளைக்குள்ளிருத்தல் எற்றுக்கு? என்று திருவாய் மலர்ந்து வழியே சென்று கொண்டிருந் தனர். "உள்ளக் குகையில் ஒளிக்கும் பரன் றன்னைக்கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டிய வுடன் மெய்ப்பொருளுணர்ந்து அச்சிதம்பர சுவாமிகள் ஞானநிட்டையுடையவராயினர்.

**சோதிவடிவினைக் துலக்கிக் காட்டியது.**

இவ்வேளைச்சேரி கிராமத்தில் அவ்வப்போது பற்பல சித்திகள் விளங்கச் சுவாமிகள் சஞ் சரித்துவரும்போது ஒருநாள் தான் தங்கிவரும்

ஒரு குயவனுடைய வீட்டின்புறத் திண்ணையில் நள்ளிரவில் ஆன்மவொளிப்ரப்பி ஒளிப்பிழம் பாக விளங்கினர். அவ்வில்லக்கிழத்தி பாதி யிரவில் வெளிவருங்கால் அவ்வொளிப்பிழம் பைத் தன கண்ணுரக் கண்டனள். உடன் அச்சமும் ஆச்சரியமும் உடையவளாய் உள்ளே சென்று கணவன் பால் கழற அக்குய வனும் ஆச்சரியமுடையவனுய் வெளிவந்து பார்க்குங்கால் மறைந்துவிட்டனர். இதனுல் குயவன் மிக மிக வருத்தங்கொண்டு கைக்கு எட்டியும் எட்டாமற் போன பொருளாயிற்றே என்று கவலையுடன் தானும் மனைவியுமாகப் பல விடங்களிலும் தேடி சுவாமிகள் இருக்குமிடம் தெரிந்து தெரிசித்துப் பலவாறு துதித்து தன தில்லத்திற்கே மீண்டும் எழுந்தருள வேண்டி னன். அதுகேட்ட பெரியார் உங்கட்கு வேண்டுவதியாது என வினவி அவர்களுக்கு புத்திரப்பேற்றில் விருப்புடைமையறிந்து தமது சட்டியில் தாம் அருந்திய பரிகலச்சோறு ஒன்றை அக்குயவன் மனைவிக்குக் கொடுத்து

உண்ணும்படிச் செய்தனர். இதை யருந்தியத ஞல் உன் வயிற்றில் ஒரு சித்தன் பிறப்பான் என்ருெரு நல்வரமும் ஈந்தனர். அம்மாது அது காரணமாகத் தானடைந்த கிழப்பருவம் நீங்கி இளம்பருவத்தளாய்க் கருவுற்று நன்மகனைப் பெற்ருள். அவரே ஓதாதுணர்ந்த உத்தமர் எகாம்பர சிவயோகி என்பவராம். இவர் சிவ ஞானச் செம்மலாக விளங்கிப்பின் முத்திப் பேறெய்தினர்.

**குயவன் வறுமை குலேவுறச் செய்தது.**

மிகுந்த காமவயத்தனுன குயவன் ஒருவன் தன்மனேயாளுடன்வாழ்க்கை நடாத்திப் பலப்பல புதல்வர்களேப் பெற்று காக்க வழியறி யாது தவித்தான். இதனுல் அவனுடைய நன் மனேயாளும் கவலேயுற்றிருந்தாள். இஃதறிந்த சுவாமிகள் இரக்க மேலிட அவ்வீட்டினுள் நுழைந்து அவனே நையப்புடைத்தனர். அப் புண்ணிய சீலன் சுவாமிகள் கருணே புரிந்த

தாகத் தன்னுள்ளத்துட் கொண்டு வெளி யூருக்கு ஓடிப்போய்விடடான்.

இதனல் சுவாமிகள் அவ்வீட்டுப்புறந் திண்ணையில் இருந்துகொண்டு "இருக்கும் இடந்தேடி என் பசிக்கே அன்னம், உருக்க முடன் கொண்டுவந்தாலுண்பேன்—பெருக்க, அழைத்தாலும் போகேன். அரனே என் தேகம், இளைத்தாலும் போகேன் இனி" என்ற முடிவில் அமர்ந்திருந்தார். அவ்வூரிலுள்ளார் சுவாமிகள் அமர்ந்துள்ள இடந்தேடி உண வளித்துப் போனர்கள். தமக்குவந்த அவ்வுண விஞல் அக்குழந்தைகளையும் தாயையும் பாது காத்துவந்தனர்.

குயவன் வறுமையுணர்ந்து அதற்காக சுவாமிகள் அவ்வீட்டில் தங்கியிருக்கும் நிலை மையை யறிநத சில அன்பர்கள் அக்குயவன் மனைவிக்கு வேண்டிய பொருளுதவி புரிந்தனர். இதனல் அக்குயவன் குடும்பம் செம்மையுற் றது.

## தொண்டனை வலிந்தாளுதல்

இங்கு இருந்துசுவாமிகள் புறப்பட்டுச் செல்கையில், சுவாமிகள் கண்முன் ஒருதொண்டன் வறியோனாய் எதிர்ப்பட்டான். அவனை சுவாமிகள் தனது திருக்கரத்தாற்பற்றி இழுத்து வடதிசைக்கேகும் வண்ணம் தள்ளிவிட்டனர். அவன் உண்மையறிவு தோன்றியவனாய் வட திசையையே நோக்கிச் சென்று மாதவஞ் செய்து உய்ந்தனன்.

## மதுபாலான மகிமை

அற்புத மகிமைகள் பல சுவாமிகள் பால் நிகழ்வதுணர்ந்த அன்பர் பலரும் சுவாமிகளை வணங்கி நல்லாசி பெற்றுச்செல்லுவாராயினர். இதனைக் கண்ட சிலர் சுவாமிகள்பால் பொரு மையும் கொண்டனர். சுவாமிகட்குத் தீங் கிழைக்கவும் துணிந்தனர். சுவாமிகள் சென்னை கடற்கரை வழியே சென்று கொண்டிருக்குங் கால் அங்கிருந்த ஊணர்கள் எள்ளிநகையாடிப்

பித்தன் என்பனபோன்ற வார்த்தைகளால் வைததுமன்றிக்கொலை புரியத்துணிந்தவர் களாய் மரணம் விளைக்கக்கூடிய கொடிய மது வைக் கொடுத்தார்கள். சுவாமிகள் அதை அன்புடன் ஏற்றுச் சட்டியில் வார்த்தனர். அம்மது ஆவின் பாலாய் மாறியது. அதை நாய்கள் பருகின. அதைக் கண்ட ஊணர்கள் மீண்டும் அத்தகைய மதுவைக் கொடுத்தனர். அம்மதுவையும் முன்போலவே தமது சட்டியிற் பெய்து தயிராக்கி நாய்கட்கு அருத்தினர். அறிஞர்களும்கூட மது முதலான மயக்கப் பொருள்களை உண்ணுதல் கூடாது. என அவை மறுத்தொதுக்கப்பட்டன வாமாகலின் மெய்ஞ்ஞானியராகிய நம் சுவாமிகள் ஏற்று அருந்தவில்லை என்க.

**கனியீந்து புத்திரப் பேறருளியது**

மற்றொருநாள் தெருவில் கிடந்த எச்சில் இலைகளை சேர்த்துக்கொண்டு ஒரு வீட்டின் முன்சென்று வீட்டிற்குரியவனை கொடுஞ்சொற்

கள் பலவற்றைக் கூறி வைதனர். அதனைச் சுவாமிகளின் மறக்கருணையென்றுணராதவனுய்த்தானும் வைது அடிக்கத் துணிந்து வெகுண்டெழுந்தான். அப்போது சுவாமிகள் இரண்டாய்ச் சேர்ந்துள்ள ஒருகனியை அவன் எதிரில் வீசி எறிந்து இதை அருந்தினுல் பேறுண்டு என்று கூறி மறைந்தருளுதலும், நல்லுணர்வுண்டானவனுய்த் தவறு செய்து விட்டமைக்குப் பெரிதும் இரங்கி வழிபட்டுய்ய எண்ணியும் சுவாமிகளின் காட்சி கிடைக்கா தொழியவே வருந்தி சுவாமிகளின் திருவுருவை நினைந்து வழிபட்டு அக்கனியைத் தன்மனைவிமார் இருவரிடமும் கொடுத்து உண்ணும்படிச் செய்தான். அவர்களுள் ஒருத்தி அதனை எச்சில் என வெறுத்துவிட்டாள். மற்றவள் அருட்பிரசாதம் எனக்கொண்டு அன்புடன் ஏற்று அருந்தினள். அதனுல் அன்று முதல் கருவுற்றிருந்து நல்லாண்மகவொன்று பெற்றெடுத்தனள். அவனும் பலப்பல நலம்பெற்றுய்வானுயின். ஞானிகள் வாழ்வு முழுதும்

மக்கள் நலம் கருதியதே யாமாகலின் ஆங்காங்கு நிகழ்ந்த அனைத்தையும் ஒன்று சேர்த்து முற்றவும் எழுதுவது இயலாத காரியமாகும். ஆதலின் வழக்காற்றிலிருப்பவைகளை மட்டும் துருவி ஆய்ந்து ஒருவாறு இதன்கண் கூறப்பட்டிருக்கின்றது.

**சுவாமிகள் சென்னையிற்சிறைப்படுத்தப்பெற்றது**

சென்னைப் பதியில் உள்ள ஒரு முகம்மதிய அதிகாரி உடம்பெங்கும் ஆடையினுல் மூடிக் கொண்டுள்ள மாதுடன் வண்டியிலேறிச் செல்லும்போது, உடையோ கோவணமோ ஒன்றுமேயில்லாமல் வெற்றுடம்புடன் ஓடிக் கொண்டிருந்த தோபா சுவாமிகளைக் கண்ட வுடன் பெருங்கோபம் அடைந்து வெறும்பித்த னென மதித்து தன் ஏவலாளரை விளித்து இப்பித்தனை வீதியிற்றிரியும்படிவிடக் கூடாது. ஆதலின் இப்போதே இவனை வெளியேற்று வீராக எனக்கட்டளையிட்டனன். அவ்வாறே ஏவலாளர்கள் வெருட்டிப்பார்த்தும் கூட

பாலன் போன்று அசையாது நின்றனர். இத னுல் உண்மையைத் தெரிந்து கொண்ட ஏவலாளர்கள் இவர் உடம்பில் அபிமானம்சிறிதும் இல்லாத ஞானி; இவர்நம் ஏவலுக்கு அஞ்சிச் செல்லமாட்டர். இவரால் யாருக்கும் சிறு இடையூறும் நேராது என்று கூறினுர்கள்.

இதனுல் முன்னிலும் மிகுந்த கோபம் உடையவனுய் வேறு சில ஏவலாளர் மூலம் விலங்கிடுவித்து சிறைச்சாலையில் அடைத்து வைக்கும்படிச் செய்துவிட்டுத் தனதிருப்பிடஞ் சென்றனன்.

அன்றிரவு அம்முகமதியன் தன் வீட்டில் படுக்கையறைக்குச்சென்றபோது அப்பள்ளி யறையில் சுவாமிகள் எழுந்தருளியிருந்ததைக் கண்டு மனம் பதைத்தான். உடல் நடுங்கிற்று. சங்கிலியால் விலங்கிட்டுச் சிறையில் அடைக் கப்பட்டிருந்தும்கூட வெளியில் வந்து பாது காவலான வீட்டறைக்குள் நுழைந்து களங்க மற்ற முகப்பொலிவுடன் விளங்கு தலைக்கண்ட

வுடன் ஐயமும், அச்சமும், ஆச்சரியமும்ஒருங்கே உண்டாயின. தனக்கேற்பட்ட ஐயம் தவிர்த்துக் கொள்ளுவதற்காகச் சிறைச்சாலைக்குச் சென்று பார்க்கப் பூட்டப்பட்ட அனைத்தும் பூட்டியவாறே இருக்கச் சுவாமிகள் மட்டும் அங்கு இல்லாமலிருக்கக் கண்டான். சுவாமிகள் பெரியார்தான் என்பது அப்போது அவன் உள்ளத்தில் திடம்பெற்றது. வீட்டிற்குவந்து சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி மன்னித்தருளுமாறு வேண்டினன். சுவாமிகள் திருவருள் பாலித்தனர்.

**வேலூருக்குக் கொண்டுவருதல்**

இவ்வதிகாரிக்குச் சுவாமிகள்பால் பற்றும், பயமும் அதிகரித்துவந்தது. மக்கள் கூட்டம் அதிகமாகவுள்ள சென்னையிலிருந்துவருவது, ஏனையவர்கள் சுவாமிகளின் பெருமையறியாது தீங்கிழைத்துக்கேடெய்துவதற்கு ஏதுவாம். மக்கள் நடமாட்டம் குறைவாயுள்ள சிறு கிராமங்கள் ஏதேனும்ஒன்றில் இருக்கச் செய்தல்

சால்புடைய தாகும் என்று எண்ணினன். அன்பர்கள் சிலரிடம் இதனைத் தெரிவித்துக் கேட்டனன்.

அதற்கு அவர்கள்.
"எவ்விடத்திலே நல்ல ஞானிகளாம்
ஈர்ங்கனி மலர்குளிர்சோலே
அவ்விடம் கானல் மேடதாம்......." என்றும்.
"பல்லார் பகை கொளலிற் பத்தடுத்த
தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்"

என்றும் நூல்களிற் கூறப்பட்டிருத்தலே எடுத்துரைத்து மறுத்தலும், அவ்வதிகாரியாகிய முகம்மதியன் அவர்கட்கு வேண்டும் உபாயங் கூறி நம்மவர் நலனுக்காகத் தனியிடத்திருக்கச் செய்வதே நலம் உடையதெனக்கூறி அவர்களே உடம்படுத்திக்கொண்டு சுவாமிகளிடம் வந்து பணிந்து, எந்தையே! தாங்கள் தயவு செய்து இவ்வண்டியின் மீதெழுந்தருளவேண்டும் என்று வேண்ட, யாவும் உணர்ந்த சுவாமிகள்

பல கருத்துக்களையுள்ளத்துட்கொண்டு. அவ்வாறே வண்டியின்மீது எழுந்தருளினர். அங்குள்ள அன்பர் சிலரையும் ஏவலாளரையும் உடன் அனுப்பி வேறிடத்திருக்கச் செய்து வேண்டும் வசதியும் செய்துவிட்டுவரும்படி ஏவினன். அவ்வண்டியை மேற்றிசை நோக்கிச் செலுத்தி இடை வழியில் உள்ள. காஞ்சி வாலாஜா ஆற்காடு முதலிய இடங்களையும் அவ்வூரின் சிறப்புக்களையும் வசதிகளையும், பிற வற்றையும் தெரிவித்துக்கொண்டுவந்தனர். அப்போது எல்லாம் ஒன்றும் கூறுது வந்த சுவாமிகள் வேலுருக்கு வண்டிவந்தவுடன் தாமாகவே இறங்கிக்கொண்டு வண்டியை திருப்பிக்கொண்டு செல்லுமாறு கட்டளையிட்டனர். அவர்களும் திரும்பிச் சென்றர்.

**வேலூரில் நிகழ்ந்த அற்புதங்களுட் சில.**

வேலூரில் சுவாமிகள் வண்டியிற் குதித்து இறங்கி அங்குள்ள ஒரு முகம்மதியன் வீட்டுக்குள் நுழைந்தார். ஆடை கோவணம் ஒன்றும்

இல்லாமல் வீட்டினுள் நுழைந்தவரை அங்கிருந்த துருக்கர்கள் ஒன்றுகூடிக்கடுஞ்சினங் கொண்டவராய்த்தடி கொண்டு தாக்கினர்கள். இழிசொற்கள் பலகூறி வைதனர். அவர்கள் சுவாமிகளை அடித்த அடிகள் எல்லாம் சுவாமிகட்குச் சிறிதும் துன்பந்தராமல் அடித்தவர்கள் உடம்பிலேயே படுதலும் அனைவரும் வருந்தி அலறினர். இவ்வித அதிசயச் செயலைக்கண்ட முகம்மதியர் இவர் யாரோ ஒரு பெரிய தவமுடையவர் என்று தெளிந்தனர். சுவாமிகளைப் பணிந்து யாங்கள் அறியாமையாற் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும் என்று பலவாருக வேண்டிக்கொண்டனர். சுவாமிகளைக் குருவாய் எண்ணிக் கொண்டாடியிருந்து உய்திபெற்றனர்.

வேலூரில் தனக்கென ஓரிடமும் கொள்ளாது எங்கு வேண்டுமானலும் சென்றுவருவார். சென்ற அங்கேயே தங்கிவிடுவார். படைவீரர் தங்கும் அரணுக்குள்ளும் சென்று

வருவார். அவரை யாரும் தடை செய்ய மாட்டார்கள். ஏதேனும் ஒரு கடையின் முன் நின்று கண்ணுல் நோக்குவாராயின் அன்று அந்தக் கடைப்பொருள் நல்ல கிராக்கியுடன் விற்பனையாகிவிடும். கடையிலுள்ள சாமான் எதையாவது தொட்டாலும் அவ்விதமே விலையாய்விடும். இதனுல் அவ்வூர் மக்கள் அவரை வரும் மகான் எனப்போற்றிவந்தனர்.

இவ்வாறு பல அற்புத நிகழ்ச்சிகள் விளங்க வேலூரில் வாழ்ந்த காலத்துத்துட்டர்கள் சிலர் சுவாமிகளின் பெருமையை உணராதவர்களாய் கயிற்ருற் கட்டி இழுத்துத் துன்புறுத்தலாம் என்று திட்டமிட்டுக் கூடிவந்து சுவாமிகளைப் பற்றியபோது பற்ற முடியாது திகைப்பவர்கள் ஆயினர்.

'எட்டுத் திசையும் பதினுறு கோணமும் எங்கும்
ஒன்ருய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை
மூடரெல்லாம்

கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைக்க.......”
நினைத்தது போன்று செய்ய முற்படின்
முடியுஞ்செயலோ?

தாங்கருதியவாறுசெய்ய இயலாமற்போகவே நாணமும் மிக்கசினமு முடையராய் சுவாமிகளை விடம் ஊட்டியேனும் கொல்லுவதென முடிவு செய்துகொண்டு விடங்கலந்த சிற்றுண்டியைக் கொண்டுவந்து கொடுத்தனர். அன்பு பாராட்டிக் கொடுத்த நயவஞ்சகர் தம் செயல் சுவாமிகட்குத் தெரிந்தும் தெரியாதவர்போல் அச்சிற்றுண்டிகளைத் தாமும் உண்டதோடு நாய்களையும் வயிறுர உண்ணும்படிச் செய்து ஊனம் ஒன்றுமின்றிச் சுகமாக இருந்தனர். சிவஞானிகட்கு நஞ்சும் அமுதும் ஒன்றேயாம் என்க. ஆனல் சிலநாட்களில் சுவாமிகட்கு இவ்வித தீங்கு புரிந்தவருட் பலரும் வாந்திபேதி கண்டு இறந்தொழிந்தனர்.

“மிகமேவிய புண்ணிய பாவ மெனும்
வினையின் பயன் மேலொரு கால முறுது

இகமே வரும் என் பதனு ளுளநோய்
எல்லாம் இவனைச் செறளய் தினவே"

என்றபடி எஞ்சியுள்ள சிலர் நோய்வாய்ப்பட்ட வராய்த் துன்புற்றனர்.

இவ்வாறு பெருந்துன்பப்பட்டு வந்த அவர்கள் பெரியாரைப் பிழைத்தமையால் எய்தியதென்று அச்சங்கொண்டு சுவாமிகளைத் தெரிசித்துக் குறையிரந்த அளவில் சுவாமிகள் அருளால் நலம்பெற்று வாழ்வாராயினர்.

பின்னொரு நாள் முடமான குழந்தை ஒன்றைப் பெற்றோர்கள் சுவாமிகள்பால் கொண்டு வந்து கிடத்தி அதன் முடத்தைப் போக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ள சுவாமிகள் தம் நாய்களை நோக்கினர். அந்த நாய்கள் அக்குழந்தையை நக்கின. அதனால் அக்குழந்தை உடனே முடம் நீங்கிநலமடைந்து நடக்கும் ஆற்றல் பெற்றது.

## அன்பன் இழந்த உத்தியோகம் அடைதலும், சுவாமிகட்கு மனைவாங்கி வைத்தலும்,

சுவாமிகள் பால் நாடோறும் ஒரு அன்பன் தவருது வந்து வணங்கித் தெரிசித்துவரும் நியமத்துடன் வழிபட்டுவந்தான். ஒருநாள் சுவாமிகள் அவனைப் பார்த்துத்திருவருள் நோக்கம் செய்து நாளைக்காகும் என்றருளிச் செய்தனர். அவன் ஆங்கிலக் கல்வி கற்று அரசாங்க அலுவல் பார்த்து ஒரு வருடகாலமாக அப்பதவியை இழந்து வருந்திக் கொண்டிருந்தவனுதலால் சுவாமிகள் திருவாக்கு அவனுக்கு மிகக் களிப்பையுண்டாக்கிற்று. மகிழ்ச்சியோடு தனதில்லம் சென்று மனையாளிடம் இதைக்கூறி இனி அவ்வேலை கிடைக்குமாயின் இரண்டு திங்கள் ஊதியத்தைச் சுவாமிகட்கு காணிக்கையாகச் சமர்ப்பிப்பேன் என்றுகூறி நம்பிக்கையுடனிருக்க மறுநாள் அவ்வாறே அரசாங்க ஏவலாளன் மூலம் உத்தரவு வந்தது. வேலையை ஒப்புக்கொண்டு அலுவல் பார்த்து அதனுல் வந்த பொருளில் ஒரு ஆயிரம் வெண்பொற்

காசு கொண்டு வந்து சுவாமிகள் திருவடியி லர்ச்சித்து வணங்கியதன்றி அப்பொருளைக் கொண்டே சுவாமிகள் வேலூரில் முதற்கண் வந்து இறங்கியவுடன் எந்த முகம்மதியன் வீட்டில் புகுந்தனரோ அதே வீட்டை விலைக்கு வாங்கிப் பழுது பார்த்து அதன்கண் சுவாமிகள் இருந்து வருவதற்கு வசதிசெய்து கொடுத்தனன். சுவாமிகளும் அவ்வில்லத்திலெழுந்தருளியிருந்தனர், அன்பர் பலரும் அம்மனைக்கு வந்து சுவாமிகளைத் தெரிசித்து அருள் பெறலாயினர்.

சித்தநாதர் சரணடைதல்

சுவாமிகள் பற்பல அற்புதங்கள் விளங்க வேலூரில் எழுந்தருளியிருந்த போது ஒரு நாள் சிவஞான பக்குவம் பெற்ற சித்தநாதர் என்னும் பெரியார் தோபாசுவாமிகளின் திருவடியைச் சரணடைந்து அருள் பெற்றுச் சிவஞானம் ஓங்கப்பெற்றனர். குருவையே சிவமெனக் கொண்டு வழிபாடு செய்து வந்தார்.

சமாதி நிலையங் கட்ட முயற்சி.

குருவின் திருமேனி சிவனுறையுந்திருக்கோயிலாம். ஆதலின் சமாதிக்குகை கட்டிச்சமாதியில் சிவலிங்கம் தாபித்துப்பூசித்தல் வேண்டும் என்னும் எண்ணம் உடையவராய்ப் பலருக்கும் தெரிவித்துப் பொருளீட்டி வந்தார். பலவூர்களிலும் சென்று பொருளீட்டி வரும்போது, காஞ்சிபுரம் சென்று அங்குள்ள வைணவர் ஒருவர் வீட்டிலும் சென்று திருப்பணிக்குப் பொருளுதவுமாறு கேட்டபோது அவ்வைணவர் மதவேறுபாடு நினைந்து கோபங்கொண்டு தகாத வார்த்தைகளால் வைது அவரை வீட்டிலிருந்து பிடித்து வெளியில் தள்ளி விட்டார். இதனால் சித்தநாதர் பெருங் கிலேசமடைந்து திரும்பிச் சென்றார்.

இவையனைத்தையும் வேலூரின்கண் எழுந்தருளியிருந்த வித்தகராய தோபாசுவாமிகள் ஞானக்கண்ணினாலுணர்ந்து தம்மருகில் அமர்ந்திருந்த அன்பர்க்கும் இவ்விவரத்தை எடுத்துக்

கூறி "அஞ்ஞானத்தழுந்தியவன் செய்கை இது" என்றுரைத்துப் புன்னகை கொண்டிருந்தார்.

வருத்தமுடன் சித்தநாதர் திரும்பிச்செல்ல வேலூரில் தோபா சுவாமிகள் இவ்வாறிருக்கும் அளவில் காஞ்சியில் உள்ள அவ்வைணவருக்குச் சுரநோய் உண்டாகி அளவற்ற துன்பம் தந்தது. அதனுல் வருந்திய வைணவர் மணி, மந்திர, மருந்துகளினுல் நீங்காது வருத்திவரவே தாங்கமுடியாத பெருந்துன்பம் எய்தி வருந்தினர். ஒன்றும் செய்து கொள்ள முடியாது வருந்திய வைணவருக்கு வைத்தியம் செய்ய வந்த வைத்தியர் நாடிபார்த்துப் பூதநாடி சலிப்பது கண்டு ஐய; நீர் இதைச்சுர நோய் என்று கருதவேண்டாம் பெரியார் சாபப்பயன் என்று கூறிச்சென்ருர்.

அதைக் கேட்ட வைணவர் தன்னிடம் வந்த சித்தநாதசுவாமிகளைத் துன்புறுத்தியதனுல் வந்த வினையாகும் என்றுணர்ந்தார். பல விடத்தும் தேடி அவரைக்கண்டு அடியில் வீழ்ந்து தவறு பொறுக்கவேண்டும் என்று

குறையிரந்தார். நோயால் துன்புறுவதையும் உணர்த்தினர். சித்தநாதர் தம்குருநாதரது திருவடியை நினைந்து அவர் திருப்பெயர் ஓதித் திருநீறு அளித்து உட்கொண்டு அணிந்து கொள்ளவும் செய்தவுடன் சுரநோய் முற்றும் நீங்கி நலன் அடைந்தார்.

இவ்வாறு, சுரநோய் நீங்கப்பெற்ற வைணவர் வேலை மாநகரடைந்து தோபா சுவாமிகளைக் கண்டு பணிந்து முன் உடற்பிணி நீங்க அருள் பெற்றமையேயன்றி, இப்போது பவப் பிணியகலவும் அருள் பெற்றுக்கொண்டு சுவாமிகளின் சமாதி நிலையத்தைக் கட்டுவதற்கு வேண்டும் பொருளையும் உதவியதுடன் மதில் சுவர் எடுத்தல் முதலிய திருப்பணிகளையும் செய்து முடித்தனர்.

ஊன் உணவை வெறுத்துக் கூறியது.

இது நிற்க, ஒரு நாள் சைவன் ஒருவன் அரனடியார்க்கு அன்னமிடுவது மிகப் புண்ணியம்,

'மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும், அண்ணலாரடியார் தமையமுது செய்வித்தல்.... ........' என்பதை யறிந்து சுவாமிகளை அமுது செய்ய வேண்டும் என்று அழைத்தனன், சுவாமிகள் அவனைச் சோதிக்க எண்ணி ஊண் உணவு அளிப்பாயாகில் உண்பேன் என்றனர். அவனும் ஒருப்பட்டு இல்லஞ் சென்று மனைவி பால் விவரம் தெரிவிக்க அவள் அதற்குச் செய்து கொடுக்க மனம் ஒருப்படாமலிருக்கவே சைவன் நாம் உண்ணுவதற்கில்லை, பெரி யோர்க்குச் செய்தளிப்பது அதனுல் நமக்குப் பெரும் நன்மைகள் ஏற்படும் என்பதைஎல்லாம் தக்க முறையில் எடுத்துரைத்துச் சம்மதிக்கச் செய்து நன்முறையில் சமைத்துச் சுவாமிகளை உணவிற் கழைக்க சுவாமிகள் எழுந்தருளி வந்து அச்சைவனை நோக்கிக் கல்லால்எறிந்தும் கொடுஞ்சொல்லால் வைதும் எதிரில் நில் லாதே என்று கூறியும் நல்லுணர்வு பிறக்கச் செய்து புலால் உண்ணல், மது அருந்துதல் முதலான தீச்செயல்களை மறந்தும் பெரியார்

செய்வரோ செய்யார். போலிஞானிகள் செய்யினும் அவர்கள் ஞானிகளாகார். வீடும் அடையார். "கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே, கூறரிய மேலான ஞான மாகும்.........." என்பனபோன்ற நற்கருத்துக்கள் பலவற்றையும் எடுத்துரைத்து அவ்வூனே உற்று நோக்கி உயிர்பெற்றெழுந்து போகுமாறு செய்தனர்.

**விடந்தீர்த்துயிர்ப்பித்தது.**

ஒரு நாள் குப்பம் என்னும் கிராமத்தில் பதினொரு ஆண்டு நிறைந்த பெண் ஒருத்தி புளியம் விதையுள்ள பாண்டம் ஒன்றில் கை வைத்தெடுக்க அதிலிருந்த அரவு தீண்டி மாண்டனள். பெற்றோர்கள் அப் பெண்ணின் உடலைச்சுவாமிகள் திருச்சந்நிதியில் கிடத்தி உயிர் தரவேண்டினர். சுவாமிகள் திருவுள்ளம் இரங்கி திருவருள் நோக்கஞ்செய்ய அப்பெண் விடம் தீர்ந்து உயிர்பெற்று துயில் நீங்கி எழுந்தாற் போல் எழுந்தனள். பெற்றோரும், மற்றோரும்

சுவாமிகளைக் குருவும், குலதெய்வமுமாகப் போற்றிப் புகழ்ந்து தம்இருப்பிடஞ் சேர்ந்தனர். அது முதற்கொண்டு அக்கிராமத்தார் இன்று வரை சுவாமிகள் குருபூசைக்கு வேண்டுவன வற்றைத் தம்மால் இயன்ற அளவு உதவிவருகின்றனர்.

**வணிகன் கடையை விழும்படிச் செய்தது.**

சுவாமிகள் கடைவீதிவழியே சென்று கொண்டிருக்கும்போது ஒரு வணிகன் கடைக் குட்சென்று விற்பனைக்குரிய பொருள்களில் உள்ள கற்கண்டு ஒன்றைக்கையில் எடுத்தார். உலோப குணமிக்கவனாதலின் அதனைத்தர மறுத்து வாங்கிக்கொண்டான். சுவாமிகள் ஒன்றும் கூறாது திரும்பி வெளிவந்தவுடனே அக்கடை காரணம் இன்றித் தானாகவே இடிந்து விழுந்தது. சுவாமிகளின் திருவடியை அவ்வணிகன் ஓடிவந்து பற்றிக்கொண்டு விழுந்து அலறினான். சுவாமிகள் அவன்செய்த தவறு நினையாது இரங்கி அருள் செய்தார்.

**எடுத்தும் எண்ணெய்க் குடங்கள் குறையாதது.**

மற்ருெருநாள் சுவாமிகள் எண்ணெய்கடைக்குச் சென்று சிறிது எண்ணெய் கேட்டார். கடைக்குள் குடங்களில் நிரம்ப எண்ணெய் இருந்தும் எண்ணெய்முழுதும் விற்றுவிட்டதாக கடைக்காரன் பொய் கூறினுன். இதைக்கேட்ட சுவாமிகள் கடைக்குள் நுழைந்து எண்ணெய் குடங்களைத்திறந்து மொண்டு மொண்டு தன் மீது ஊற்றிக்கொண்டார். அவ்வெண்ணெய் அருவி நீர்போல் பெருக்கெடுத்து வீதியில் ஓடியது. வணிகன் ஒன்றும் கூற வியலாமற்றிகைத்தான். பின் அவனும் அருகில் உள்ளவர்களும் எண்ணெயை வீண்செய்யலாமா? என்று பரிந்து வேண்டினுர்கள். சுவாமிகள் உன் பொருள் உன்னிடமே பத்திரமாய் உள்ளது என்று சொல்லிவிட்டு வெளியேறினுர். உடனே அனைவரும் உள்நுழைந்து பார்த்த போது எண்ணெய்க்குடங்கள் குறையாது நிரம்பியிருந்தமை கண்டு வியந்து சுவாமிகளைப் போற்றி வணங்கினுர்கள்.

**கண்ட யோகங்காட்டியருளல்,**

சுவாமிகள் இரவில் உறங்கும்போது திருமேனி உறுப்புக்கள் தனித்தனியாக ஆக்கப்பட்டுத் துண்டம் துண்டமாகக்கிடப்பதைக் கண்ட அன்பர் சிலர், விஷமிகள் சிலரால் வெட்டுப்பட்டிருக்கக் கூடுமோ என்று வருத்தங் கொண்டார்கள். ஆனால் சுவாமிகள் அவர் கட்குக்காலையில் இயற்கையான நிலையில்காட்சியளித்தனர். இதனால் சுவாமிகள் சித்திகளிலும் வல்லவரென்பதுணர்ந்தார்கள். இவ்வாறு அவ்வப்போது பற்பல திருவிளையாடல்கள் புரிந்துகொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் வேலைமாநகரில் வாழ்ந்தனர்.

**நரசிங்க தாசர்க்கருளல்.**

சித்தூரில் வாழ்ந்த தனவான் ஒருவனுடைய பிள்ளையாய்த் தோன்றிவளர்ந்தவர் நரசிங்கதாசர். இவர் இளமைக்காலத்தே பெற்றோர் பள்ளியிற் சேர்த்துக்கல்விபயில ஏற்பாடு

செய்தபோது கல்விவராமையால் பள்ளிக்குச் செல்லாது மறைந்திருந்து பள்ளிக்குச் சென்று வருபவர்போல் நடித்து வீடுதிரும்புவர். இஃ தறிந்த பெற்ருேர் மீண்டும் துன்புறுத்திப் பள் ளிக்கனுப்பினர். வீட்டுக்கு வருவதனுல் பெற் ருேர்கள் பள்ளிக்கு அனுப்பி விடுகிருர்கள். வீடடுக்கு வராமல் இருந்து விடுவோம் என்று எண்ணங்கொண்டு சித்தூரில் அருகில் உள்ள மலேக்குகையில் ஒளிந்துகொண்டு உணவு முத லியன இல்லாமல் மூன்று நாட்கள்வரை தங்கி விட்டனர். அப்போது வேமன்னர் என்னும் பெரியார் அவ்வழியாய்வர மலேக்குகையில் சிறுவன் தனித்திருப்பதைக்கண்டு உண்மை யைக்கேட்டுத் தெரிந்துகொண்டு அச்சிறுவன் மீது தண்ணளியுடையராய் சிறுவன் நாவை நீட்டும்படிச் செய்து நாவில் கலேமகள் பீஜ மந் திரத்தை யெழுதிவிட்டு இனிஉனக்குக் கல்வி நன்ருய் வரும் அஞ்சாதே என்று ஆறுதல் கூறிச்சென்றனர்.

அதுமுதல், அச்சிறுவன் வரகவியாய் தெலுங்கில் அளவிறந்த கீர்த்தனைகள் பாடல்கள் இயற்றித்திருமாலைப் போற்றி நரசிங்கதாசர் என்னும் பெயருடன்விளங்கினர் என்ப. இவர் திருமேனியைப் பிற்காலத்தில் வேலூரில் சலவன் பேட்டை என்னும் பகுதியில் சமாதி செய்வித்து ஆலயம் அமைத்துள்ளனர். குருபூசை முதலியவைகள் சிறப்பாக நடைபெறுகின்றன.

நரசிங்கதாசர் தனக்கு கலைமகள் அருள் கிட்டியும் குருவினுபதேசங் கிடைக்காமையால் மனங்கவன்று வாழும்நாள் தோபா சுவாமிகளின் பெருமையைக் கேள்வியுற்று வேலூருக்குவந்து சுவாமிகளை வணங்கி

"ஸ்வாமி உபதேசிஞ் சவ்வதேமி நன்னு கன்ன
தோபாஸ்வாமி உபதேசிஞ் சவ்வ தேமி"

என்றற்றெருடக்கத்து எண்ணிறந்த தெலுங்கு கீர்த்தனைகளை இயற்றி வழிபட்டு வருநாட்களில் ஒரு நாள் தோபாசுவாமிகள் அவரைக்கை காட்டி விளித்து மனவாக்கிற்கெட்டாத மாபரம்

பொருளைச் சுட்டாமலறியும் நெறியைக் குறிப்பாலுணர்த்தியருளக்கேட்டு அநுபூதியிற்றிகழ்ந்து விளங்குவாராயினர்.

**சுவாமிகளின் முத்திப்பேறு.**

இவ்வாறு சுவாமிகள் பற்பல அன்பர்கட்கு அருள்புரிந்து உண்மை மாணவராகிய சித்தநாத யோகியாருடன் இருந்துவரும் போது ஒருநாள் அங்குள்ளவர் அனைவரையும் நோக்கி நான் போகின்றேன் நீங்கள் வருகின்றீர்களா? என அடிக்கடிக்கேட்டு வந்தார். சுவாமிகள் சொல்லுவதன் பொருளறியாது திகைத்தனர். பின்னரும் அவ்வாறே நான் போகின்றேன் என்று கூறிக்கொண்டு தமக்கென அமைக்கப்பட்டிருந்த சமாதிக்குகையில் இறங்கி அமர்ந்து பதுமாசனத்திருந்து தற்பரநிலையையடைந்தார். அது சாலிவாகன சகாப்தம் 1772க்குச்சரியான சாதாரண ஆண்டு பங்குனித்திங்கள் இருபத்தேழாம் நாள் புதன்கிழமை பூர்வபக்கத்துப் பிரதமை ரேவதி நட்சத்திரம் கூடியநன்னாளாகும்.

இவ்வாறு ஞானயோக வலியால் விடப் பெற்ற திருமேனியை ஆகமவிதிப்படி சித்தநாத சுவாமிகள் முன்னிலையில் எண்ணிறந்த அன் பர்கள் கூடிப்பல்லிய முழங்க, கூத்தொலி எத் தொலிமல்க பால், பன்னீர் இளநீர், பஞசாமிர் தமுதலிய அளவிறந்த பூசாதிரவியங்கொண்டு அபிஷேக அலங்கார சோடசோபசார பூசை களால் வழிபாடாற்றி அடக்கம் செய்தனர் அதன்பின்னர் சித்தநாதசுவாமிகள் சிவலிங் கப்பிரதிஷ்டை கும்பாபிஷேகம் முதலியன சிறப்புற நடத்துவித்துச் சின்னுள் இருந்து தானுங் திருமேனி நீத்துச் சிவத்துடன் அத்து விதமாயினர். சித்தநாதர் திருமேனியை தோ பாசுவாமிகள் சமாதுக்குப் பக்கத்தில் சமாதி செய்துபூசித்து வந்தனர்.

சித்தநாத சுவாமிகளுக்குப்பின் மோட்டூர் சுவாமிகள் என்னும் பெரியார் இல்லறத்தில் வெறுப்புற்றுக் காசிநகரெய்தி வீடுபெறத்துணி ந்து ஆர்க்காட்டின் வழிச் செல்லும்போது அங்கு ஒரு வீட்டின் புறத்திண்ணையிலமர்ந்

திருந்த குமாரசுவாமிகள் என்னும் புண்ணிய சீலர் அவர்தம் எண்ணத்தை ஞானநோக் காலறிந்து அழைத்து அன்ப! காசிக்குச் சென்று கருமங்தொலைத்து முத்தியெய்து வதினும் வேலைமாநகரில் கோவில் கொண் டெழுந்தருளிய தோபா சுவாமிகட்குப் பணி புரிந்துவந்தால் முத்திப்பேறு எளிதிற்கிட்டும் என்று கூறித் தாம் அருந்திக் கொண்டிருந்த மொச்சைக்கொட்டையில் ஒருபிடி எடுத் தளித்துத் தோபாசுவாமிகளின் திருக்கோவிலை அடையுமாறு செய்தருளினர்.

மோட்டூர் சுவாமிகள் மொச்சைக்கொட் டையை அருந்திவிட்டு இதுவே ஆசிரியரின் திருவருட்பேறு என்று தெளிந்து வாழ் நாள் முழுதும் தோபாசுவாமி கட்குப்பணிசெய்து உண்மைஞானம் பெற்றுவீடுபெற்றனர், இப் பெரியாரே சுவாமிகளின் சமாதிக்கோவிலுக்கு வருவாய் வரக்கூடிய நிலம் முதலியவற்றைத் தேடிவைத்தவராவர்.

இவருக்குப்பின் சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்கசுவாமிகள் மாணவர் தெய்வசிகாமணிசுவாமிகள்என்பார், தோபாசுவாமிகளின் பூசை முதலியவற்றை வழுவறநடத்திவந்தார். இவர்தேவாரத் திருமுறைகளை வழுவாது நாடோறும் பாராயணம் செய்யும் நியம முடையவர். சிவாலயங்கட்குச்சந்தனம் அரைத்துக் கொடுக்கும் பெரும்பணியை மேற்கொண்டொழுகுபவர். துறவற நெறி வழுவாத தருமசீலர். எல்லாருடைய நற்புகழுக்கும்இலக்கானவர். இவர்காலத்தில் ஆலயத்தில் சிலபகுதிகள் செப்பன் செய்யப்பட்டுள்ளன.

தெய்வசிகாமணி சுவாமிகளுக்குப்பின் அவர்தம் ஆணைப்படி சுப்பிரமணியசுவாமிகள் மடத்தின் தலைவராயிருந்து முறைப்படி நித்தியபூசையாதியவைகளை நடத்தி வந்ததுடன் உலகம் புகழும்படி மிகவிரிவான முறையில் குருபூசையும் நடத்தி வந்தனர். இவர் உலகியல் விவகாரத்தில் நன்கு தேர்ந்தவராய் விளங்கினமையால்

தமது நன்முயற்சியால் இக்கோவிலுக்கு மடைப் பள்ளியும் மகாமண்டபம்முதலியனவும் விரிவாக இயற்றச்செய்ததுடன் மடாலயக் கட்டிடத்தை யும் விரிவாக்கிச் செம்மைபெற அமைத்தனர்.

இவருக்குப்பின் சின்ன சுப்பிரமணிய சுவா மிகள் மடாதிபதியாக இருந்து முன் அறங் களைக் குறைவர நடத்தி வந்தனர், இவர் அடக் கம் முதலிய குணங்களை அணிகலனாகக் கொண்டு விளங்கினார்.

இவருக்குப்பின் தற்போது மடாதிபதியாக இருந்து வருபவர், ஸ்ரீ வடிவேல்சுவாமிகள் ஆவர். கோயிலூர் மடத்தின் தலைவராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிகரின் சீடரா வர். சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடத்தில் பன்னாள் பணியாற்றியவர். வேதாந்த விற்பன்னர். இவர் தோபாசுவாமிகளின் நித் திய நைமித்திக பூசைகளை வழுவற விரிவான முறையில் நடாத்தி வருகின்றார். வேண்டும்

அன்பர்களைக்கொண்டுமேலும் விரிவான முறையில் நடத்தும் நன் முயற்சிகளும் நடந்துவருகின்றன.

தோப்பா சுவாமிகள் சந்நிதியில் முன்னே இவ்வாறு நிகழ்ந்தமைபோல் இப்போது தரிசிக்கும் அன்பர்கட்கும் வேண்டும் நலன்கள் சித்திக்கப்பெறுகின்றன. காண்பார்க்குப் பாவநீக்கமும், நினைப்பார்க்குப் பொருள் ஆக்கமும், தொழுவார்க்குத் தொல்வினைத்தீர்வும் ஆகியவைகளைத்தந்தருள் செய்கின்றார். சில ஆண்டுகளுக்குமுன்காசியிலிருந்துதென்னாட்டுக்கு யாத்திரையாக வந்த அன்பர்களில் நிட்டையில் ஒருவர்கண்ணுக்குமட்டும் தோபாசுவாமிகள் தோன்றினர். அதனால் அவ்வன்பர் தம் இருப்பிடம் விட்டு இவ்வூரில் பெரியார் இருக்கின்றனர் என்பதறிந்து தோபா சுவாமிகள் ஆலயத்தைக் கண்டு வழிபட்டு நலன்கள் அடைந்தமையன்றி அந்தக்கோவிலில் பிரதிஷ்டைசெய்யக்காசிக்குச் சென்று பாணலிங்கம் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்துப் பிரதிட்டை செய்யச் செய்தனர்,

இது வன்றி, மற்ருெரு அன்பர் சித்தியை விரும்பினுர். தோபா சுவாமிகள் திருக்கோயிலின் முன்னின்று கையை உயர்த்தி நீட்டிப்பிடித்துக்கொண்டு எனக்குச் சித்தியளித்தாலன்றி நீட்டியகையை மடக்கமாட்டேன் என்று சபதம் கூறி நின்று கடுந்தவம் புரிந்தனர். அவர் தவத்திற்கிரங்கிச்சித்தி பெறச்செய்ததன்றி அதற்கடையாளமாக அவர் நினைத்திருந்தவாறே நீட்டியகையில் வளை ஒன்றும் பொருந்தும்படிச்செய்தனர்.

பின்னெருநாள் சட்டிச்சாமி என்னும் ஒருவர் தம்கண்ணில் மாசுபடர்ந்து மறைத்தமைக்காக அதனைபோக்கிக்கொள்ள தோபா சுவாமிகளை அடைந்து அருந்தவம் கிடந்துவர அவருக்கு ஊனக்கண்ணையும் ஞானக்கண்ணையும் அருளினுர்

இவ்வாறு இவ்வாலயத்தை வழிபட்டோர் அடைந்தநலன்கள் எண்ணில் அடங்கா. இன்றும் அவ்வாறு குழந்தைகள் முதல்யாவரும்

நோய் நீக்கத்தை அவர்தம் விபூதி ஒன்றினாலே நீங்கப்பெறுகின்றனர். இப்பெரியார் சமாதி வழிபாடு, பெறுதற்கரிய பேற்றைத்தரவல்லதாகி மிளிர்கின்றது.

இப்பெரியார் சரித்திரத்தைப் படிப்போரும் கேட்போரும் இருமைநலனும் பெறுவர் எண்பது திண்ணம்

**வாழ்த்து.**

---

எந்தை காழி வந்த நாதன் இணைச் சரண்கள்
வாழியே
அந்த நாதன் அருளையுற்ற அண்ணல்
தோபா வாழியே
அந்தி வண்ணனுடைவன்றன் அடியர் வாழி
வாழியே
ஐந்து வன்னமோடு நீறமர்ந்த கண்டி
வாழியே.

**ஸ்ரீ தோபா சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்,**

**முற்றிற்று.**

## குமரன் செந்தமிழ் நூற்பதிப்புக் கழகத்தில் கிடைக்கக்கூடிய நூல்கள்.

| | | ரூ. | |
|---|---|---|---|
| 1. | நால்வர் நான்மணிமாலை விருத்தியுரை | 2 | 00 |
| 2, | ° காசியாத்திரை விளக்கம் | 1 | 25 |
| 3, | ° ஷ தெலுங்கு புத்தகம் | 1 | 25 |
| 4. | ஈசுரநிச்சயம் | 3 | 50 |
| 5. | சைவ சமய சரபம் | 2 | 50 |
| 6. | நாலாயிரப் பிரபந்த விசாரம் | 1 | 00 |
| 7. | பஞ்சதசி (தமிழ்க் கவியும், உரையும்) | 6 | 00 |
| 8. | சித்தாந்த லேச சங்கிரகம் (மகேசுரானந்த் சுவாமிகள் மொழிபெயர்ப்பு) | 3 | 00 |
| 9, | சித்தாந்தப் படம் | 1 | 00 |
| 10. | செங்குந்தர் பிரபந்தங்கள் | 3 | 00 |
| 11. | விருத்தாசல புராணம் | 1 | 00 |
| 12- | திருக்குடைந்தை மான்மியம் | 0 | 62 |
| 13. | சிதம்பர சிவாலய தரிசனம் | 0 | 75 |
| 14. | சிதம்பர வைபவர் சுருக்கம் | 0 | 31 |
| 15. | நெல்வாயிலரத்துறை வரலாறு | 0 | 31 |
| 16. | பெரியநாயகி விருத்தம் (உரையுடன்) | 0 | 25 |
| 17. | விநாயகர் அகவல், அலங்காரம். அநுபூதி | 0 | 15 |

| | | | |
|---|---|---|---|
| 18. | மார்கழிப் பாராயண மஞ்சரி • | 0 | 50 |
| 19. | திருவெம்பாவை, திருப்பாவை முதலியன | 0 | 15 |
| 20. | வாக்குண்டாம், தெள்ளிய உரையுடன் | 0 | 19 |
| 21. | அறிவுரைத் திரட்டு | 0 | 06 |
| 22. | சிவலிங்காஷ்டகம் | 0 | 30 |
| 23. | மீனாக்ஷி திருமணம் | 0 | 12 |
| 24. | சுத்த சாதகம் உரையுடன் | 1 | 50 |
| 25. | குமார தேவர் சரிதம் | 0 | 50 |
| 26. | மெய்கண்டார் வரலாறு | 0 | 50 |
| 27. | விநாயகர் கவசம் அரும்பதவுரை | 0 | 25 |
| 28. | இலாகிரிப்பொருள்களா? எமதூதர்களா? | 1 | 50 |
| 29. | முருகேசர் முதுநெறி வெண்பா வுரை | 1 | 25 |
| 30, | திருவருட்பயன் க. வெள்ளைவாரணார் உரையுடன் | 1 | 25 |
| 31. | கைவல்லியம் பொன்னம்பல சுவாமி உரையுடன் | 6 | 00 |

---

°இக் குறியீடுள்ள நூல்கள் காசி நகரத்தார் சத்திரத்திலுள்ள **K.** கிருஷ்ணன் அவர்களிடமும் கிடைக்கும்



